بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# நம்பர் இரண்டு

(தொழுகை)

104
2.N1

CONNEMARA PU...
26 SEP 195



ஆக்கியோன்.
B. அப்துல் லத்தீப் கான், ஆப்காநி.
மதுரை.

# முகவுரை

சகோதரர்களே!

நம் தென்னாட்டில் தப்லீக் ஜமாஅத்துகள் வேலைசெய்ததிலிருந்து நகரங்கள் முதல் குக்கிராமங்கள் தோறும் மக்கள் தொழுகைக்கு கூட்டங் கூட்டமாய் செல்வதும் தம்கடமையை நிறைவேற்றி வருவதும் யாவரும் தெரிந்ததே. இஸ்லாத்தின் இரண்டாவது பர்லான தொழுகையை சடங்காயின்றி, பரிபூரணமான தொழுகையாக தொழவேண்டுமென்பது இஸ்லாமிய கோட்பாடு ஆகையால் யாவரும் பரிபூரண தொழுகையைக்கடைபிடிக்க இந்நூல் உதவுமென்ற நோக்குடன் எழுதி இப்புத்தகத்திற்கு நம்பர் இரண்டு எனபெயர்சூட்டி வெளியிட்டுள்ளேன். இதில் குறைகள் இருப்பின் மன்னித்து, துவாச்செய்ய கோருகிறேன்.

இங்ஙனம்

15–3–54. மதுரை

B. அப்துல் லத்தீப் கான், ஆப்கானி.
காதிமே இஸ்லாம், தெற்குவாசல்,
மதுரை.

---

(அரபிப்பதங்களின் எழுத்து உச்சரிப்புகளை அரபி ஓதத்தெரிந்தவர்களிடம் அணுகி தெரிந்துக்கொள்க.)

بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# ஐந்து நேரத்தொழுகை

| | | | |
|---|---|---|---|
| பஜ்ரு: | சுன்னத் | 2 | ரக்கஅத் |
| | பர்லு | 2 | ,, |
| லுஹர்: | சுன்னத் | 4 | ,, |
| | பர்லு | 4 | ,, |
| | அடுத்தசுன்னத் | 2 | ,, |
| அஸர்: | சுன்னத் | 4 | ,, |
| | பர்லு | 4 | ,, |
| மஃரிபு: | பர்லு | 3 | ,, |
| | சுன்னத் | 2 | ,, |
| இஷா: | சுன்னத் | 4 | ,, |
| | பர்லு | 4 | ,, |
| | அடுத்த சுன்னத் | 2 | ,, |
| | வித்ருவாஜிபு | 3 | ,, |
| ஜும்ஆ: | சுன்னத் | 4 | ,, |
| | பர்லு | 2 | ,, |
| | அடுத்த சுன்னத் | 4 | ,, |
| | அடுத்த சுன்னத் | 2 | ,, |

## "தொழுகை"

தொழுகை ஆரம்பிக்கும் முன் ஒலு செய்து கொள்ளவும்

ஒலு செய்ய உட்காரும்போது முழங்கால் வரை வேஷ்டியினால் மறைத்து சிறு துடக்கை நீக்குவதற்கு ஒழு செய்கிறேன் என்று நியத்து செய்து

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மானிர்ரஹீம்

என்று வாயை 3 விடுத்தம் கொப்பளித்து
நாசிக்கு 3 விடுத்தம் தண்ணீர்செலுத்தி
முகம் அடங்கலும் 3 விடுத்தம் கழுவுவது
இருகைகளையும் முழங்கைக்குமேல் கழுவுவது
இருகைகளையும் தண்ணீரில் நனைத்து தலையை
ஷி கையினால் தடவி காதை குடைந்து
இருபெருவிரலைக்கொண்டு காதின் பின்புறமாக
தடவுவது.
இருகால்களையும் கரண்டைக்குமேல் துப்புரவாக
கழுவுவது.

## ரக்காஅத்துக்கு விபரம்

தொழத்துடங்குபவர் இன்ன நேரத்தின் இன்ன ......தொழுகையை அல்லாவுக்காக இத்தனை ரக்காஅத் தொழுகிறேன். என நிய்யத்துச் செய்த வண்ணம்

நிலையில் நின்று இரு கைகளையும் உயர்த்தி ஐந்து விரல்களையும் விரித்து இரு கை பெரு விரல்களையும் இருகாது சோனையைத்தொட்டு அல்லாஹு அக்பர் என்று இரு மணிக்கட்டுவரை இரு கைகளையும் தொப்புளின் கீழே சேர்த்துக்கட்டி தனா ஓத வேண்டும்.

## தனா

ஸுப்ஹானகல் லாஹும்ம வ பிஹம்திக
வ தபாரகஸ்முக வ தஆலா ஜத்துக வ
லா இலாஹ கைருக

என ஓதியபின்

## தனுவின் பொருள்

[ஆண்டவனே நீ தூய்மையானவன் உன் புகழைக்கொண்டு ஆரம்பம் செய்கிறேன் உன்திரு நாமம் மகிமை பொருந்தியது உன்மகாத்மியம் மகா உன்னதமானது. வணக்கத்திற்குப் பாத்திரவான் உன்னையன்றி வேரொருவனுமில்லை.]

### அஊது பில்லாஹி

### மினஷ்ஷைத்தா னிர்ரஜீம்

### பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

சொல்லி அல்ஹம்து சூரா ஓதவேண்டும்.

### பொருள்

பிரஷ்டம் செய்யப்பட்ட ஷைத்தானி (ன்சேஷ்டையி) னின்று அல்லா(ஹ்) வினிடத்தில் பாதுகாப்பைத் தேடுகிறேன். அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால்.

### அல்ஹம்து சூரா

1. அல்ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்
2. அர்ரஹ்மா னிர்ரஹீம்
3. மாலிகி யௌமித்தீன்
4. இய்யாக்க நஃபுது வ இய்யாக்க நஸ்தயீன்

5. இஹ்தினஸ் ஸிராதல் முஸ்தகீம்
6. ஸிராதல்லதீன அன் அம்த அலைஹிம்
7. கைரில் மஃலூபி அலைஹிம் வலல்
ளால்லீன்.

பொருள்

1. சகலலோகங்களுக்கும் நாயகனாகிய அல்லாஹ்வுக்கே எல்லாப்புகழும்.

2. அருளாளன், அன்புடையோன்

3. கூலி கொடுக்கும் நாளின் எஜமான்

4. யாம் உன்னையே வணங்குகிறோம். இன்னும் உன்னிடத்திலேயே உதவிதேடுகிறோம்.

5. எங்களை நீ நேரான வழியிலே சீராகநடத்து வாயாக.

6. எவருக்கு நீ அருட்கொடை யளித்தனையோ அவருடைய வழியில்

7. கோபத்துக் குள்ளானவர்களுடைய வழியிலும் வழிதவறிச்சென்றோர்களுடைய வழியிலுமன்று.

என்று ஓதியதும் ஆமீன் கூறி (ஆமீன் பொருள் அப்படியே ஆகக்கடவது) ஏதாவது ஒரு சூராவை ஓதியபின்

அல்லாஹு அக்பர் என்று குனிந்துநின்று

(அல்லா மகாபெரியவன்)

ஸுப்ஹான றப்பியல் அளீம்

என்று மூன்று முறை கூறி

பொருள்

(மகத்துவமிக்க என்னுடைய நாயனே தூயவன்)

ஸமி அல்லாஹு லி மன் ஹமிதா

அல்லாஹும்ம ரப்பனு வ லகல் ஹம்து

பொருள்

ஆண்டவன் தன்னைப்புகழ்ந்தவனை ஏற்றுக்கொண்டான் எங்கள் ஆண்டவனே எல்லாப்புகழும் உனக்கே உரித்தானது.

எனக்கூறி அல்லாஹு அக்பர் என்று நிலைக்கு வந்து சஜ்தாவுக்குச்சென்று முழங்கால்களையும் தரையில் படியவைத்து இரு கைகளையும் ஊன்றி நெத்தியும் நுனிமூக்கும் தரையில் படியவைத்தும்

ஸுப்ஹான ரப்பியல் அஃலா

என்று மூன்று முறைகூறி

பொருள்

(மகாஉன்னதமான நாயனே தூயவன்)

ஸஜ்தா செய்தபின் நிலைக்குவந்து கால்மடித்து

உட்கார்ந்து மறுபடியும் முன்செய்த மாதிரி செய்து முன் சொன்னபடியே சொல்லவேண்டியது.

இது ஒரு ரக்காஅத்து மறுபடியும் அல்லாஹு அக்பர் என்று சொல்லியவண்ணம் நிலையில்நின்று முன் மாதிரியே அல்ஹம்து சூரா ஓதியபின். ஒரு சூராவை ஓதி. ருகூஉ, ஸஜ்தா செய்தபின் இருப்பில் இருந்துக் கொண்டு

*அத்தஹிய்யாத்து லில்லாஹி வஸ் ஸலவாத்து வத்தய்யிபாத்து அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன்னபிய்யு வ ரஹமதுல் லாஹி வ பரகாதுஹு அஸ்ஸலாமு அலைனு வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன், அஷ்ஹது அன் லா இலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரஸூலுஹு*

இரண்டு ரக்காஅத் தொழுகையாயின், அத்த ஹிய்யாத்துக்குபின் தருதும் துஆவும் ஓதவேண்டும்.

பொருள்

சரீர சம்மந்தமான வணக்கங்களும் பொருள்

சம்மந்தமான வணக்கங்களும் அல்லாஹுத்த ஆலாவுக்கேயாம். நபியே உங்கள் மீது சாந்திஉண்டாகுக இன்னும் ஆண்டவனுடைய கருணையும் அபிவிருத்தி [ஆசி] யும் உண்டாகுக [இன்னும்] எங்கள்மீதும் நல்லவர்களான அல்லாஹ்வின் அடியார்கள் மீதும் சாந்தி உண்டாக கடவது வணக்கத்திற்குப் பாத்திர மானவன் அல்லாவைத்தவிர்த்து வேரொருவனுமில்லை. என்று யான் உறுதிகூறுகிறேன். (இன்னும்) திண்ணமாக முஹம்மத் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வுடைய தூதரும் அடியாருமாயிருக்கிருரென்றும் யான் உறுதி கூறுகிறேன்.

## தருது

அல்லாஹும்ம ஸல்லி அலாமுஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின் கமா ஸல்லேத்த அலா இப்ருஹீம் வ அலா ஆலி இப்ருஹீம இன்னக்க ஹமீதுன் மஜீது அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வ அலா ஆலி முஹம்மதின் கமா பாரக்த்த அலா இப்ருஹீம் வ அலா ஆலி இப்ருஹீம இன்னக்க ஹமீதுன் மஜீத்.

## துஆ

அல்லாஹும்மக்பிர்லி வலி வாலிதய்ய வலி உஸ்தாதிய்ய வல் ஜமீயில் முமினீன வல்முமினாதி வல்முஸ்லிமீன வல் முஸ்லி மாதி பி ரஹ்மதிக யா அர்ஹமர் ராஹிமீன்

என்று ஓதியபின் அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்மதுல்லாஹி எனமுதலில் வலது புறமும் பிரகு இடது புறமாகவும் தலையைத் திருப்பி ஸலாம் கூற வேண்டும்.

## சலவாத்தின் பொருள்

ஆண்டவனே இப்ருஹீம் [அலை] அவர்கள் மீதும் இப்ருஹீம் (அலை) அவர்களது குடும்பத்தார் மீதும் நீ கருணைசெய்ததுபோல். முஹம்மத் [ஸல்] அவர்கள் மீதும் முஹம்மத் [ஸல்] அவர்களது குடும் பத்தார் மீதும் நீ கருணைசெய்வாயாக நிச்சயமாக நீ புகழப்பட்டவன் தலைமைத்தனமுள்ளவன் ஆண்டவனே இப்ருஹீம் [அலை] அவர்களுக்கும் இப்ருஹீம் [அலை] அவர்கள் குடும்பத்தாருக்கும் நீ பரக்கத் செய்தது போலவே முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் முஹம்மத் (ஸல்) அவர்கள் குடும்பத்தாருக்கும் பரக்கத்து செய் தருள்வாயாக. நிச்சயமாக நீ புகழப்பட்டவன் தலை மைத்தனமுள்ளவன்.

ஆண்டவனே! நீ எனக்கும் என் தாய், தந்தையர் என் ஆசிரியர் மூமினுன எல்லா ஆண்கள் மூமினுன எல்லா பெண்கள் முஸ்லிமான எல்லா ஆண்கள் முஸ்லிமான எல்லா பெண்கள் ஆகியவர்களுக்கும் நின் கருணையைக்கொண்டு பிழைபொறுத்தருள்வாயாக ஏ எல்லாக் கிருபையாளரைக்காட்டிலும் மிகமேலான கிருபையுள்ளவனே.

## ஓர் துஆ

ரப்பனு ஆதினு பித்துன்யா ஹஸனதன் வ பில் ஆகிரதி ஹஸனதன் வகினு அதாபன் னுர்.

## வித்ரு தொழுகையின் குனூது

அல்லாஹும்ம இன்னு நஸ்தயீனுக வ நஸ்தக் பிருக வ நுமினு பிக்க வ நதவக்கலு அலைக்க வ நுத்னி அலைக்கல் கைர் வ நஷ்குருக வ லாநக்புருக வ நக்லஉ வ நத்ருக்கு மையப்ஜுருக்க அல்லாஹும்ம இய்யாக நஃபுது வ லக்க நுஸைல்லீ வ நஸ்ஜுது வ இலைக்க

நஸ் ஆ வ நஹ்றபிது வ நர்ஜூ ரஹ்மத் தக்க வ நக்ஷா அதாபக இன்ன அதா பகல்ஜித்த பில் குப்பாரி முல்ஹிகுன்.

வித்ரு தொழுகையின் குனூது தெரியாவிட்டால் ரப்பனு ஆதினு பித்துன்யா ஹஸனத்தன் வபில் ஆகிரத்தி ஹஸனத்தன் வகினு அதாபன்னர் என்று ஓதவும்.

## குனூதின் பொருள்

ஏ, அல்லாஹ் நிச்சயமாக நாங்கள் உன்னிடமே உதவி தேடுகிறோம். மேலும் உன்னிடமே பாபமன்னிப்பைத் தேடுகிறோம். மேலும் உன்மீதே உறுதி கொண்டிருக்கிறோம். மேலும் உன்மீதே பூரண நம்பிக்கை கொண்டிருக்கிறோம் மேலும் மகாமேலான விதத்திலே உன்னைத்துதிக்கின்றோம் மேலும் உனக்கு நன்றி செலுத்துகின்றோம் மேலும் உன்னிடத்தில் நாங்கள் நன்றி மறந்தவராயில்லை மேலும் உனக்கு கீழ்ப்படியாதவனை நாங்கள் ஒதுக்கித்தள்ளி நீக்கிவிடுகிறோம்.

ஏ அல்லாஹ் உன்னையே வணங்குகிறோம் மேலும் உனக்கே தொழுது சிரவணக்கம் புரியுகின்றோம் மேலும் உன்னிடத்திற்கே விரைந்தோடுகிறோம்

மேலும் உன்னுடைய அருளை எதிர்பார்த்தவர்களாக இருக்கிறோம் மேலும் உன்னுடைய வேதனைக்கு அஞ்சிக்கொள்ளுகிறோம். ஏனெனில் நிச்சயமாக உன்னுடைய கொடியவேதனையானது [இச்சத்திய சன்மார்க்கத்தை] நிராகரிப்பவர்களைப் பற்றிக்கொள்ளுகின்றது.

## தொழுகையின்பின் ஓதும் துஆ

*அல்லாஹு¬ம்ம அன்தஸ்ஸலாமு வ மின்கஸ்ஸலாமு வ இலைக்க எர்ஜிஉஸ்ஸலாமு ஹய்யினா றப்பனா பிஸ்ஸலாமு வ அத்கில்னா தாரஸ்ஸலாமு தபாரக்த றப்பனா வ தஆலைத்த யாதல் ஜலாலி வல் இக்ராம்.*

### பொருள்

ஆண்டவனே! நீ சாந்திமயமாயிருக்கின்றாய் உன்பாலிருந்தே சாந்தி உதயமாகின்றது உன்பாலே [அந்தச்] சாந்தி மீண்டும் திரும்புகின்றது. எங்கள் ஆண்டவனே சாந்தியைக்கொண்டே எங்களை நீ வாழச்செய்வாய் மேலும் எங்களைச்சாந்தி நிகேதனத்துள்ளே நுழையச்செய்வாய் எங்கள் ஆண்டவனே

நீயே உயர்ந்திருக்கின்றாய் மேலும் ஈ கண்ணியத் திற்கும் மரியாதைக்கும் உரியவனே நீயே மேன்மை யானவனாயிருக்கின்றாய்.

ஆயத்துகள்.

(1)

*பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்*

*1. குல் யா அய்யுஹல் கா பிரூண 2. லா அஃபுது மா தஃபுதூன 3. வலா அன்தும் ஆபிதூன மா அஃபுது 4. வலா அன ஆபிதும் மா அபத்தும் 5. வலா அன்த்தும் ஆபிதூன மா அஃபுது 6. லக்கும் தீனுக்கும் வலிய தீன்.*

பொருள்

அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லா ஹுத்தஆலாவின் திருநாமத்தால் ஆரம்பிக்கின்றேன்.

1. (நபியே! நிராகரிக்கும் மக்காவாசிகளை நோக்கி) நீர்கூறும் நிராகரிப்போர்களே!

2. நீங்கள் வணங்குபவைகளை நான் வணங்காமாட்டேன்.

3. நான் வணங்குபவனை நீங்கள் வணங்கவில்லை.

4. (அவ்வாறே) இனியும் நீங்கள் வணங்குபவைகளை நான் வணங்குபவனன்று.

5. நான் வணங்குபவனை இனி நீங்களும் வணங்குபவர்களல்ல.

6. உங்களுடைய (வினைக்குரிய) கூலி உங்களுக்கும் என்னுடைய [செயலுக்குரிய] கூலி எனக்கும் (கிடைக்கும்)

(2)

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

1. குல் ஹுவல்லாஹு அஹத் 2. அல்லாஹுஸ்ஸமத் 3. லம்யலித் வலம்யூலத் 4. வலம்யகுன்லஹு குபுவன் அஹத்

பொருள்

அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் (ஆரம்பிக்கின்றேன்.)

1. [நபியே! மனிதர்களை நோக்கி] நீர் கூறும் அல்லாஹ் ஒருவன்தான்.

2. (அந்த) அல்லாஹ் [எவருடைய] தேவை யுமற்றவன் (யாவும் அவன் அருளையே எதிர்பார்க் கின்றனர்)

3. அவன் (எவரையும்) பெறவுமில்லை [எவராலும்] பெறப்படவுமில்லை (ஆகவே) அவனுக்கு தகப்பனுமில்லை சந்ததியுமில்லை

4. [தவிர] அவனுக்கு ஒப்பாகவும் ஒன்று மில்லை

(3)

*பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்*

*1. குல்அஊது பிரப்பில்பலக் 2. மின் ஷர்ரிமாகலக் 3. வ மின்ஷர்ரி காஸிகின் இதாவகப் 4. வ மின் ஷர்ரின் நப்பா தாத்தி பில்உகதி 5. வ மின்ஷர்ரி ஹாஸி தின் இதா ஹஸத்*

பொருள்

அருளாளனும் அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் (ஆரம்பிக்கின்றேன்)

1. (நபியே! நீர் பிரார்த்தனைசெய்து) கூறு வீராக அதிகாலையில் எஜமானிடம் நான் இரட்சிப்பைக் கோருகிறேன்

2. அவன் சிருஷ்டித்திற்கும் பொருள்களின் தீங்கைவிட்டும்.

3. [யாவையும்] மறைத்துக்கொள்ளும் இருண்ட இருளின் தீங்கைவிட்டும்

4. முடிச்சுபோட்டு ஊதும் (சூதுக்கார பெண்களின்) தீங்கைவிட்டும்

5. பொருமைக்காரர்களின் தீங்கை விட்டும், [இரட்சிக்கக்கோருகிறேன்.]

(4)

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

1. குல்அஊதுபிரப்பின்னுஸ் 2. மலிக் கின்னுஸ் 3. இலாஹின்னுஸ் 4. மின் ஷர்ரில் வஸ்வா ஸில்கன்னுஸ் 5. அல் லதீ யு வஸ்விஸு பீ ஸுதூரின்னுஸ் 6 மினல் ஜின்னதி வன்னுஸ்

பொருள்

அருளாளனும் அன்புடையோனுமாகி அல்லாஹ்வின் திருநாமத்தால் (ஆரம்பிக்கின்றேன்)

1. [நபியே! பிராத்தனைசெய்து] நீர் கூறு

வீராக! மனிதர்களின் இறைவனிடத்தில் நான் இரட்சிப்பைக் கோருகின்றேன்.

2. (அவன் தான்) மனிதர்களின் [உண்மையான] அரசன்

3. [அவனே] மனிதர்களின் (வணக்கத்திற்குரிய உண்மையான) ஆண்டவன்.

4. 6 மனிதர்களுடைய இருதயங்களின் [வீண சந்தேகங்களை உண்டுபண்ணிவிட்டு மறைந்து கொள்ளும் விஷமிகளின்] தீங்கை விட்டும் (இரட்சிக்கக்கோருகின்றேன். அத்தகைய விஷமிகள்) ஜின்களிலுமிருக்கின்றனர் மனிதர்களிலுமிருக்கின்றனர்.

---

மூன்று நேரங்களில் எந்த தொழுகையும் தொழுகக்கூடாது. 1. சூரியன் உதயமாகும் போதும் 2. சூரியன் உச்சிக்கு நேர்வந்தபோதும் 3. சூரியன் அஸ்தமிக்கும்போதும்.

நபில் தொழுகை என்பது எவ்வளவு ஜாஸ்தியாக தொழுகின்றோமோ அவ்வளவு நன்மை உண்டு சுபுஹு தொழுது அவ்விடத்திலே அல்லாஹ்வின் திக்ரில் இருந்து சூரியன் உதயமானபின் இரண்டு ரக்காஅத்து (இஷ்ராக்) நபில் தொழுதால், ஒரு ஹஜ்ஜும் ஒரு உம்ராவும் செய்த பலன் கிட்டும்.

நபில் தொழுகை உட்கார்ந்து தொழுவதைக் காண நின்று தொழுவது இரட்டிப்பு நன்மை உண்டு

## முக்கிய குறிப்புகள்!

1. உறுதியாகவே, தொழுகையானது துராசாரத்தினின்றும் தீமையினின்றும் விலக்கி வைக்கின்றது (அல்குர்ஆன்)

2. தனித்தனியே தொழுது கொள்ளாமல் பிரதிதினமும் ஐந்துவேளையும் ஒன்றுகூடி ஜமாஅத்தாக தொழுவது ஸுன்னத்முஅக்கதா. தனியாக நின்று தொழுவதைக்காண ஜமாஅத்துடன் சேர்ந்து தொழுவது 25 மடங்கு மேலானது.

3. இமாமாகநிற்பவர் தனாஓதினபின்பும் அல்ஹம்து அல்லது சூரா ஓதும்போதும் இமாமத்துடன் போய்சேருபவர் நியத்து செய்து தக்பீர்கட்டி சும்மா நிற்கவேண்டும் ருகூவு, சுஜூது இன்றும் மற்றவைகளை அததின் ஷரத்துப்படி சொல்லவேண்டும். தொழுகையில் இமாமை பின்தொடர்ந்தே செல்லவேண்டும் முந்தக்கூடாது.

3. தொழுபவர் முன்னில் ஆண்டவன் இருக்கின்றான் என்னும் எண்ணத்துடன் பயந்து, ஓதவேண்டியவைகளில் மனதைசரியாக செலுத்தி தொழவேண்டும். சுபுஹூக்கு பின்னும் மக்ரீபுக்குபின்னும் 3-தஸ்பிஹ்கள் ஓதுவது நலம் பயக்கும்செயல், அதிக நன்மை உண்டு.

## தஸ்பீஹ்

| | | |
|---|---|---|
| இஸ்திஃபார் | 100 | தடவை |
| மூன்றாவதுகலிமா | 100 | ,, |
| ஸலவாத்து | 100 | ,, |

4. ஏ நன்னம்பிக்கை கொண்டவர்காள்! ஜுமுஆவுடைய நாளின் தொழுகையின் பொருட்டு (அதான் சொல்லி) அழைக்கப்படுமாயின், உடனே அல்லாஹ்வின் ஞாபகத்தின் பக்கல் விரைந்து செல்லுங்கள்; மேலும் (நுங்களுடைய) வியாபாரத்தை (அதுசமயம்) விட்டுவிடுங்கள் நீங்கள் அறிவாளிகளாயிருப்பின் இ(ந்த உபதேசமான)து உங்களுக்குச் (சலாவும்) சிறந்ததாயிருக்கிறது. (62–10,)

மேலேகண்ட குர்ஆன் வாக்கியத்திலிருந்து நாம் தெரிந்துக்கொள்வது என்னவெனில் ஜுமுஆ தொழ கடமைப்பட்டவர்கள் ஜுமுஆ தொழுகைக்கு பாங்கு சொன்னது முதல் தொழுகை முடியும்வரை உலக விபகாரங்களில் ஈடுபடுவது தவிர்க்கப் பட்டுள்ளது என்பதே.

பள்ளிவாசல் என்பது ஆண்டவனை வணங்கும் ஸ்தலம் (அது அவன் வீடு) அங்கு உலகவின் பேச்சுகள் பேசுவதுகூடாது.

1. நிச்சயமாக அல்லாஹ் மனிதர்கள்மீது பெருங்கிருபையுடையோனாக இருக்கிறான். அவர்களில் அநேகர் அவனுக்கு நன்றி செலுத்துவதில்லை.

(அல்குர்ஆன் 10-60)

2. நீங்கள் என்னை தியானித்துக்கொண்டேயிருங்கள் நானும் உங்களை நினைத்து (அருள் புரிந்து) வருவேன் நீங்கள் நன்றிகெட்டவர்களாகிவிடாமல் எனக்கு நன்றிசெலுத்திவாருங்கள்.

(அல்குர்ஆன் 2–152)

3. மெய்யாகவே விசுவாசங்கொண்டிருப்பவர்கள் அவர்கள்தாம்; (அவர்கள்முன்) அல்லாஹ்வின் திருநாமத்தை ஸ்தோத்திரம் செய்யப்பட்டால், அவர்களுடைய இருதயங்கள் திருப்தியடைந்து விடுகின்றன. (ஏனென்றால்) அல்லாஹ்வின் திருநாமத்தை ஸ்தோத்திரம் செய்வதனால்,(உண்மை விசுவாசிகளின்) இருதயங்கள் நிச்சயமாகத் திருப்தியடையும் என்பதை (நபியே) நீர் அறிந்துகொள்ளும்.

(அல்குர்ஆன் 13–28)

4. எவன் ரஹ்மானுடைய நல்லுபதேசத்திலிருந்து கண்ணைமூடிக்கொள்கிறானோ அவனுக்கு நாம் ஒரு ஷைத்தானை (சினேகிதனாக) கற்பித்துவிடுவோம். அவன் அவனுக்கு இணைபிரியாத தோழனாகிவிடுகிறான். நிச்சயமாக (அந்த ஷைத்தான்கள் தாம்) அவர்களைநேரானபாதையிலிருந்து தடுத்து விடுகின்றனர். எனினும் அவர்களோ தாங்கள் நேரானபாதையில் இருப்பதாகவே எண்ணிக்கொள்வார்கள்.

(அல்குர்ஆன் 43-36-37)

5. பாவத்திலிருந்து விலகிக்கொண்டோரும் (இறைவன் ஒருவனையே) வணங்குவோரும், (இரவு பகலாக அவனைத்) துதிசெய்து புகழ்வோரும், (நோம்பு நோற்போரும், மார்க்கக்கல்வி கற்றல், மார்க்கபிரசாரம் செய்தல் போன்ற மார்க்க விஷயத்திற்காக) யாத்திரை செய்வோரும், குனிந்து சிரம்பணிந்து (தொழுவோரும்) நன்மையான காரியங்களைச்செய்யும்படி ஏவுவோரும் பாவமான காரியங்களை விலக்குவோரும், அல்லாஹ்வுடைய வரம்புகளை பேணிநடப்போரும் ஆகிய இத்தகைய (உண்மை) விசுவாசிகளுக்கு (சுவனபதி கிடைக்குமென்று நபியே) நீர்நன்மாராயம் கூறுவீராக.

(அல்குர்ஆன்: 9-112)

6. அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் எவர் வழிப்படுகின்றாரோ அவர் நிச்சயமாக மகத்தான பெரும்பாக்கியத்தை அடைந்து விட்டார்.

(அல்குர்ஆன் 33-71)

7. அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் எவரேனும் மாறுசெய்தால் நிச்சயமாக அவர்கள் பகிரங்கமான வழிகேட்டிலேயே இருக்கிறார்கள்.

57142

(அல்குர்ஆன் 33-36)

8. எவர்கள் அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் மாறுசெய்கிறார்களோ அவர்களுக்கு நிச்சயமாக நரகநெருப்புத்தான் (கூலியாகும்) அதில் அவர்கள் என்றென்றுமே தங்கிவிடுவார்கள்.

(அல்குர்ஆன் 72-23)

---

நயீம் பிரஸ், 16, மஹால் 7-வது தெரு, மதுரை.